# ஸ்ரீதோடகாஷ்டகம்

## (குரு ஸ்துதி)



ஆனந்த கிரி என்ற தோடகர்

ஸ்ரீ குருப்யோ நம:

# ஸ்ரீ

# தோடகாஷ்டகம்

(குரு ஸ்துதி)

ஆசிரியர்

தோடகாச்சாரியர்

தமிழ் விளக்கம்

சுவாமி பிரபஞ்சநாதன்

# <u>ஸ்ரீதோடகாஷ்டகம்</u>

ஆத்மாவின் பூரணத்துவமான உண்மையை உணர்வதே உயிர்கள் உய்வதற்குரிய வழி. அந்த வழியை காண்பித்துக் கொடுத்து, கருணையுடன் உதவ குருவைத்தவிர வேறு ஒருவரும் துணையில்லை.

பல வழிகள் பல மதங்கள், பல தத்துவங்கள் இருந்த போதிலும் குருவின் பெருமை எல்லாவற்றிலும் வலியுறுத்தபட்டிருக்கின்றது.

ஒவ்வொரு சாதகனும் அடைய வேண்டிய நிலை, அதற்கு உதவும் குரு, முயற்சி செய்யும் சீடன் என்று மூன்று பேர் இருந்த போதும். இவர்கள் மூவருமே ஒருவர்தான் என்கின்றது அத்வைத சித்தாந்தம்.

இதை உணர்தலில்தான் வேறுபாடு உள்ளது என்ற பொருள் படும்படி, பகவான் ஆதி சங்கரரின் ஸ்லோகங்கள் உண்டு. இத்தகைய ஸ்லோகங்களை எழுதிய இவரின் சீடர்களில் ஒருவரான தோடகர் என்றொரு மகான் இயற்றிய **“தோடகாஷ்டகம்”** என்னும் எட்டு ஸ்லோகங்கள் குரு - சிஷ்ய உறவையும், ஜகத்குருவான ஆதிசங்கரரின் பெருமைகளையும் பறை சாற்றுகின்றன.

இந்த தோடகாஷ்டகம் என்ற ஸ்லோகங்கள் மிகவும் கடினமான சங்கத இலக்கண அடிப்படையில் இருந்தாலும் படிப்பதற்கு மிகவும் பரவசத்தை தருகின்றன.

இந்த தோடகாஷ்டகத்தின் ஒவ்வொரு ஸ்லோகத்தையும் படிக்கும் போது ஆதிசங்கரரின் பெருமையும், தெய்வீகமும் வெளிப்படுவதுடன், அவரிடம் சிஷ்யர் தோடகருக்கு இருந்த குருபக்தியும் வெளிப்படையாகின்றது.



## தோடகர் கதை

ஸ்ரீ சங்கரர் தன் சிஷ்யர்களுக்கு தினமும் பாடங்களை நடத்திவந்தார். இவரது பாஸ்யம் பாடங்களை ஆர்வமுடன் கேட்க வந்த சிஷ்யர்களில் பத்மபாதர், சுரேஷ்வரர், ஹஸ்தாலமலகர் போன்றவர்களில், பத்மபாதரோ பகவான் ஸ்ரீ நரசிம்மரின் அருளைப் பெற்றவர். சுரேஷ்வரரோ மண்டலமிஸ்ரர் ஆக இருந்து, ஸ்ரீ சங்கரரிடம் வாதம் புரிந்து, பின்னர் சீடர் ஆனவர். ஹஸ்தாமலகரோ பிறவியிலேயே பிரம்ம ஞானி. இவரிடம் உள்ளங்கை நெல்லிக்கனி போன்று ஞானம் விளங்குகின்றது என்று ஆச்சாரியரே தன் சீடனாக ஆக்கிக்கொண்டவர்.

இவ்வாறு, இவர்கள் பாடம் படித்துக் கொண்டிருக்கும் பொழுது, இவர்களுக்கு எடுபிடி வேலை செய்யும் பையன் கிரி என்ற ஒருவன் சிருங்கேரியில் இருந்தான். இவனோ ஞான சூனியம், இவனுக்கு இவர்களது பாடங்கள் எதையும் புரிந்துக் கொள்ள முடியாதவாறு, எதுவும் தெரியாதவனாக இருந்தான். இவன் குருவுக்கு சேவை செய்வதில் மட்டும் மிகவும் ஆர்வமுடன் இருந்தான். இவர்களுக்காக பூ பறிக்கவும், துணிகளை துவைக்கவும் முதலில் வருவான். பாடங்களை படிப்பதில் சற்றும் ஆர்வமின்றி இருந்தான்.

மற்ற மூன்று சீடர்களும் தாங்கள் கற்ற பாடங்களில், ஒருவருக்கு ஒருவர் கற்றவற்றிலிருந்து தெரிந்துக் கொண்டவைகளை வாதமும், பிரதிவாதமும் புரிந்துக் கொள்வர். ஆனால், கிரியோ, இதில் எதிலும் கலந்துக்கொள்ள மாட்டான்.

ஒரு நாள் சீடர்கள் மூவரும் ஆச்சாரியரிடம் பாடம் படிக்கும் ஆர்வத்துடன் அவர் முன் அமர்ந்து, பொறுமையுடன்

காத்திருந்தனர். ஆச்சாரியரும் அமைதியாக அமர்ந்திருந்தாரே தவிர பாடங்களை ஆரம்பிக்கவில்லை. நேரமோ போய்க் கொண்டே இருந்தது. ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டனர். ஆனால், ஆச்சாரியரோ மோன நிலைக்கு சென்று விட்டார். இவ்வாறு மௌனத்தில் குரு அடிக்கடி செல்வதை இவர்கள் அறிந்திருந்தாலும், பாடம் இன்னும் பாக்கி இருப்பதும், அதை இன்று எப்படியாவது படித்து முடிக்க வேண்டும் என்ற ஆவலுடனும் இவர்கள் மூவரும் காத்து இருந்தனர்.

நேரம் சிறிது கடந்தது. பத்மபாதர் சற்றே துணிச்சலுடன், குருவே இன்று பாடம் இல்லையா? என்று விசாரித்தார்.

ஆச்சாரியரும் கண்களை மெதுவாக திறந்து பார்த்தார். கிரி எங்கே? அவனும் வரட்டும், என்று கண்களை மீண்டும் மூடிக்கொண்டார்.

என்ன கிரியா? சீடர்கள் மூவரும் ஒருவருக்கு ஒருவர் அவர்களது முகத்தைப் பார்த்துக்கொண்டனர். இவர்களது மௌனத்தை மீறி, ஒரு அற்புதமான குரல் ஆச்சாரியர் இருந்த திசையை நோக்கி மெல்ல காற்றினிலே கலந்து கீதமாக வந்தது.

ஆம்! குரு ஸ்துதி! பாடியதோ கிரி. சங்கீதமோ அவன் முன் கைகட்டி அவனுக்கு சேவகம் புரிந்தது. பாடலின் உள்ளார்ந்த பொருளோ அனைத்தையும் மிஞ்சும் விதமாக எளிதாக விளங்கியது. சமஸ்கிருத மொழியின் ஆழம் அதில் மிக அழகாக இருந்தது. குருவின் அருள் பூரணமாக அவனிடம் பிரகாசித்தது.

அந்த பாடலின் பொருள் ஆச்சாரியரை யார் எனத் தனக்கு தெரிந்து விட்டதாகவும், சாட்சாத் அந்த ஈஸ்வரனே

எனக்கு குருவாக வந்து இருப்பதாகவும், அந்தப் பேரொளியான பரப்பிரம்மமே ஆச்சாரியராக வந்து அவதரித்துள்ளதாகவும் சொல்லி அவரை வணங்கிக் கொண்டிருந்தான்.

கிரியின் குரு ஸ்துதியை கண்டு மற்ற சீடர்கள் வியந்தனர். ஆச்சாரியரின் கருணையைக் கண்டு கண்கலங்கினர். கிரியின் எட்டு பாடல்களை '**அஷ்டகம்**' என்று அழைத்து அதற்கு தோடகாஷ்டகம் என்று பெயர் சூட்டப்பட்டு, அன்று முதல் கிரியை **"தோடகர்"** என்று மற்றவர்களும் அழைக்க ஆரம்பித்தனர்.

அவரே, பிற்காலத்தில் **'தோடகாச்சாரியார்'** என்று அனைவராலும் அழைக்கப்பட்ட மிகச் சிறந்த ஆச்சாரியர்களில் ஒருவராக திகழ்ந்தார். இந்தியாவின் வடக்கில் இமயமலையில் பத்ரிநாத் அருகே அதர்வண வேதத்திற்குரிய ஜோதிர் மடத்தை நிறுவி அதன் முதல் மடாதிபதியாக விளங்கியவர்.




ஜோதிர் மடம்

# <u>ஸ்ரீதோடகாஷ்டகம்</u>

विदिताखिलशास्त्रसुधाजलधे महितोपनिषत्कथितार्थनिधे ।
हृदये कलये विमलं चरणं भव शंकर देशिक मे शरणम् ॥ (1)

**விதி$^3$தாகி$^2$லசாஸ்த்ரஸுதா$^4$ஜலதே$^4$ மஹிதோபநிஷத் கதி$^2$தார்த$^2$நிதே$^4$ ।**
**ஹ்ரு’த$^3$யே கலயே விமலம் சரணம் ப$^4$வ சங்கர தே$^3$சிக மே சரணம் ॥ (1)**

**<u>பொருள்:-</u>**

ஹே ஜகத்குரு: பாற்கடலைப் போன்ற மிகப்பெரிய சாஸ்திரக் கடலைக் கற்றுணர்ந்தவரே!

உபநிஷத் என்னும் பெரும் பொக்கிஷத்தின் பொருளை உலகுக்கு உணர்த்தியவரே!

எப்பொழுதும் என் இதயகமலத்தில் வைத்து போற்றும் உமது பரிசுத்தமான பாதங்களிடம் சரணடைகிறேன்.

ஹே சங்கர குருவே, நீரே எனக்கு அடைக்கலம்.

करुणावरुणालय पालय मां भवसागरदु:खविदुनहृदम् ।
रचयाखिलदर्शनतत्वविदं भव शंकर देशिक मे शरणम् ॥ (2)

**கருணாவருணாலய பாலய மாம் ப$^4$வஸாக$^3$ரது:$^3$க$^2$விதூ$^3$நஹ்ரு’த$^3$ம் ।**
**ரசயாகி$^2$லத$^3$ர்சநதத்த்வவித$^3$ம் ப$^4$வ சங்கர தே$^3$சிக மே சரணம் ॥ (2)**

**<u>பொருள்:-</u>**

கருணைக்கடலே! பிறவியினால் உண்டான துன்பக்கடலிலிருந்து காப்பாற்றுங்கள்.

தத்வ ஞானத்தை நான் அறிந்துணர அருளுங்கள்.

ஹே சங்கர குருவே, நீரே எனக்கு அடைக்கலம்.

भवता जनता सुहिता भविता निजबोधविचारण चारुमते ।
कलयेश्वरजिवविवेकविदं भव शंकर देशिक मे शरणम् ॥ (3)

**ப$^{4}$வதா ஜனதா ஸுஹிதா ப$^{4}$விதா நிஜபோ$^{3}$த$^{4}$விசாரண சாருமதே ।**
**கலயேஸ்வரஜீவவிவேகவித$^{3}$ம் ப$^{4}$வ சங்கர தே$^{3}$சிக மே சரணம் ॥ (3)**

<u>பொருள்:-</u>

தங்களால்தான் ஜனங்கள் ஆன்மானுபவம் பெற்று சுகமடைகின்றனர். சந்தோஷமடைகின்றனர்.

ஜிவனைப்பற்றிய உண்மையை உணர்வதில் சிரேஷ்டரே! எனக்கும் ஜீவ ப்ரம்ம பந்தத்தை உணரும் ஞானத்தை பெறச் செய்யுங்கள்.

ஹே சங்கர குருவே, நீரே எனக்கு அடைக்கலம்.

भव एव भवानिति मे नितरां समजायत चेतसि कौतुकिता ।
मम वारय मोहमहाजलधिं भव शंकर देशिक मे शरणम् ॥ (4)

**ப$^{4}$வ ஏவ ப$^{4}$வாநிதி மே நிதராம் ஸமஜாயத சேதஸி கௌதுகிதா ।**
**மம வாரய மோஹமஹாஜலதி$^{4}$ம் ப$^{4}$வ சங்கர தே$^{3}$சிக மே சரணம் ॥ (4)**

**பொருள்:-**

ஹே ஜகத்குரு! நீரே எல்லாம் எனக்கு. என் இறைவனே நீர்தான் என்று உணரும் போது எனக்கு பரம சாந்தியும் சந்தோஷமும் நிம்மதியும் ஏற்படுகிறது.

எல்லையில்லாத அஞ்ஞானக் கடலிலிருந்து நீரே என்னை காப்பாற்றவேண்டும்.

ஹே சங்கர குருவே, நீரே எனக்கு அடைக்கலம்.

सुकृतेऽधिकृते बहुधा भवतो भविता समदर्शनलालसता ।
अतिदीनमिमं परिपालय मां भव शंकर देशिक मे शरणम् ॥ (5)

ஸுக்ரு’தேऽதி4க்ரு’தே ப3ஹுதா4 ப4வதோ ப4விதா ஸமத3ர்சனலாலஸதா ।
அதிதீ3னமிமம் பரிபாலய மாம் ப4வ சங்கர தே3சிக மே சரணம் ॥ (5)

**பொருள்:-**

பலவிதமான அனுஷ்டான ஆசாரங்களை உணர்ந்து செய்யும் போதுதான் தன்னையே உணரும் ஆவல் பிறக்கிறது.

மிகவும் தீனனான என்னை காப்பாற்றுங்கள். எனக்கும் அதை உணர்த்துங்கள்.

ஹே சங்கர குருவே, நீரே எனக்கு அடைக்கலம்.

जकतीमवितुं कलिताकृतये विचरन्ति महामहसश्छलतः ।
अहिमांसुरिवात्र विभासि गुरो भव शंकर देशिक मे शरणम् ॥ (6)

**ஜக$^{3}$தீமவிதும் கலிதாக்ரு’தயோ விசரந்தி மஹாமஹஸச்ச$^{2}$லத: ।**
**அஹிமாம்சுரிவாத்ர விபா$^{4}$ஸி கு$^{3}$ரோ ப$^{4}$வ சங்கர தே$^{3}$சிக மே சரணம் ॥ 6॥**

<u>பொருள்:-</u>

ஹே குரு! தெய்வம் பல வடிவத்திலும், வேஷத்திலும் உலகைக்காக்க உலவுகின்றது. அந்த வடிவங்களிலெல்லாம் சூரியனைப் போன்று பிரகாசிப்பவரே!

ஹே சங்கர குருவே, நீரே எனக்கு அடைக்கலம்.

गुरुपुंगव पुंगवकेतन ते समतामयतां नहि कोऽपि सुधी ।
सरणाकगतवत्सल तत्वनिधे भव शंकर देशिक मे शरणम् ॥ (7)

**கு$^{3}$ருபுங்க$^{3}$வ புங்க$^{3}$வகேதந தே ஸமதாமயதாம் நஹி கோऽபி ஸுதீ:$^{4}$ ।**
**சரணாக$^{3}$தவத்ஸல தத்த்வநிதே$^{4}$ ப$^{4}$வ சங்கர தே$^{3}$சிக மே சரணம் ॥ (7)**

<u>பொருள்:-</u>

சிரேஷ்டமான குருவே! ரிஷபத்தை சின்னமாக கொண்ட இறைவா! உமக்கு ஈடு எவருமில்லை.
அடைக்கலமானவர்களுக்கு சரணாகதி அளிப்பவரான தத்வ பொக்கிஷமே.

ஹே சங்கர குருவே, நீரே அடைக்கலம்.

विदिता न मया विशदैककला न च किंचन काञ्चनमस्ति गुरो ।
द्रुतमेव विधेहि कृपां सहजां भव शंकर देशिक मे शरणम् ॥ (8)

**விதி$^{3}$தா ந மயா விசதை$^{3}$ககலா ந ச கிஞ்சந காஞ்சனமஸ்தி கு$^{3}$ரோ ।**
**த்$^{3}$ருதமேவ விதே$^{4}$ஹி க்ரு’பாம் ஸஹஜாம் ப$^{4}$வ சங்கர தே$^{3}$சிக மே சரணம் ॥ 8॥**

<u>பொருள்:-</u>

ஞானத்தின் ஒரு பகுதியைக் கூட என்னால் முழுதுமாக பிழையின்றி கற்கப்படவில்லை. கல்வி செல்வத்தின் ஒரு துளி கூட என்னிடம் இல்லை.

ஹே குரு! உமது பரம கருணையினாலே என்னை ஆசீர்வதியுங்கள்.

ஹே சங்கர குருவே, நீரே அடைக்கலம்.

**தோடகாஷ்டகம் நிறைவு.**

